பூமியை அளக்கின்ற மஹாவிஷ்ணுவின் உருவம்போல் பயங்கரமாகவும் மிக்க ஆஸ்சர்யமாகவும் இருக்கும். வானரர்களே! இதெல்லாம் என் புத்திக்குத் தோற்றுகின்றது. என் மனதும் வலக்கை துடிப்பது முதலான சேஷ்டைகளும் அங்ஙனமே தெரிவிக்கின்றன. நான் தப்பாமல் ஸீதையைக்காண்பேன். நீங்கள் ஸந்தோஷத்துடன் இருப்பீர்களாக. நான் வேகத்தில் வாயுவை நிகர்த்தவன்; கருடனுக்கொப்பானவன்; பதினாயிரம் யோஜனைகள் தாண்டுவேனென்று எனக்குத் தோற்றுகின்றது. நான் வஜ்ராயுதத்தைக் கையிலேந்தின இந்த்ரனையாயினும் ஸ்வயம்புவாகிய ப்ரஹ்மதேவனையாயினும் பராக்ரமத்தினால் ஜயித்து அவர்கள் கையினின்று அம்ருதத்தை மிக்க வேகத்துடன் கொண்டுவருவேன். ஆயிரம்படச் சொல்லியென்? லங்கையையாயினும் பிடுங்கிக்கொண்டு வருவேனென்று என் அபிப்ராயம்' என்றனன். அங்ஙனம் மிதம் மிஞ்சின தேஜஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ற அவ்வானர ஸிம்ஹன் கர்ஜித்துக்கொண்டிருக்கையில், வானரர்களனைவரும் மிகவும் ஸந்தோஷம் அடைந்து ஆஸ்சர்யத்துடன் பார்த்துக்கொண்டிருந்தனர். அந்த ஹநுமான் அங்ஙனம் ஸமஸ்த வானர பந்துக்களுக்கும் சோகம் தொலையும்படி மொழிந்த அந்த வாக்யங்களைக்கேட்டு ஜாம்பவான் மிகவும் ஸந்தோஷித்து அவ்வானரோத்தமனை நோக்கி 'வீர! கேஸரிபுத்ரனே! வாயுகுமார! ஹநுமானே! என்னப்பனே! நீ இப்பொழுது உன் பந்துக்களாகிய ஸமஸ்த வானரர்களுடையவும் மஹாதுக்கத்தையெல்லாம் போக்கடித்தனை. வானரஸ்ரேஷ்டர்களெல்லோரும் சேர்ந்து உன் மங்களத்தை விரும்பி, நீ போகுங்கார்யம் ஸித்திக்கும்பொருட்டு மனவூக்கத்துடன் மங்கலாசாஸனஞ்

செய்துகொண்டிருப்பார்கள். மஹர்ஷிகளின் ஸம்மதத்திலும் பெரியோர்களது அனுக்ரஹத்தினாலும் இம் மஹாஸமுத்ரத்தை நீ தாண்டுவாயாக. நீ திரும்பிவரும் வரையில் நாங்களெல்லோரும் ஒருகாலால்நின்றுகொண்டிருப்போம். இவ்வானரர்களனைவருடையவும் ப்ராணன்கள் உன்கையில் இருக்கின்றன' என்றனன். அனந்தரம் வானரஸிம்ஹனாகிய ஹநுமான் அவ்வானரர்களைப்பார்த்து 'நான்ஸமுத்ரத்தைத் தாண்டும்பொழுது என்வேகத்தை இந்தப்பூமி ஸஹிக்கமுடியாது. இந்த மஹேந்த்ரபர்வதம் உயர்ந்த கல் ப்ரதேசங்கள் மிகுந்திருக்கப்பெற்றது. இதன் சிகரங்கள் நிலையாயிருப்வைகளும் (அசையாதிருப்பவைகளும்) மிகப் பெரியவைகளுமாயிருக்கின்றன. ஆகையால் இவையே என் வேகத்தைப் பொறுக்கவல்லவை. நானாவித வ்ருக்ஷங்கள் நிறைந்து கைரிகதாதுக்களின் பெருக்குகளால் விளக்கமுற்றிருக்கின்ற இம்மஹேந்த்ர பர்வதசிகரங்களில் நான் என்வேகத்தைத் தொடங்குகிறேன். வானரஶ்ரேஷ்டர்களே! இங்கிருந்து நூறுயோஜனைதூரம் தாண்டப்போகையில் என்பாதங்களின் அபிகாதத்தை (உறைத்தலை) இந்தப் பர்வதசிகரங்கள் தரிக்கவல்லவை' என்றனன். அனந்தரம் பகைவரை அடக்குந் திறமையுடைய வாயுகுமாரனும் வாயுவை நிகர்த்தவனுமாகிய அந்த ஹநுமான் பர்வதஶ்ரேஷ்டமாகிய அந்த மஹேந்த்ர பர்வதத்தின்மேல் ஏறினன். அந்தப் பர்வதம் பலவகை வ்ருக்ஷங்களுடையதும் பசும்புல் தரைகளில் திரியும் பல ம்ருகங்களோடுகூடியதும் செடிகளும் புஷ்பங்களும் நிரம்பநிறைந்ததும் என்றும் வ்ருக்ஷங்களும் புஷ்பங்களும் பழங்களும் ஓயாதிருக்கப்பெற்றதும் ஸிம்ஹங்களும் பெரும் புலிகளும் திரியவும் மத்தகஜங்கள் ஸஞ்சரிக்கவும் பக்ஷி

கள் பழங்களின் ரஸத்தைப்புசித்து மதித்துக் குவியல் குவியலாகக் கலகலவென்று கூவவும் ஆங்காங்குப் பெருகிவருகின்ற மலையருவிகளின் ஜலங்கள்நாற்புறமும் நிறைந்திருக்கவும்பெற்று மிகவும் பெரிய சிகரங்களால் விளக்கமுற்றதுமாயிருந்தது. மஹாபலனும் பராக்ரமத்தினால் தேவேந்த்ரனைப் போன்றவனுமாகிய அவ்வானரோத்தமன் ஹனுமான் அந்த மஹாபர்வதத்தின்மேல் விளையாடினன். அங்ஙனம் விளையாடிக்கொண்டிருக்கும் பொழுது அம்மஹா பர்வதம் மஹானுபாவனாகிய ஹனுமானது பாதங்களின் அபிகாதத்தினால் நெருக்குண்டு, ஸிம்ஹத்தினால் அடிக்கப்பட்ட பெரிய மத்தகஜம்போல் ப்ரகாசித்தது. அப்பர்வதம் அந்தக் கபீந்த்ரனுடைய அடிவைப்புகளால் தன் சிகரங்கள் சிதறப்பெற்று ஜலப்ரவாஹங்களைப் பெருக்கியது. ஹனுமானது பாதங்களின் உதைத்தல்களால் அம்மஹா பர்வதத்தில் அப்பொழுது ம்ருகங்களும் யானைகளும் பயந்தோடிப் போயின. பருப்பருத்த வ்ருக்ஷங்களும் நடுக்கமுற்றன. மத்யபானஞ் செய்வதில் மிக்க அபிநிவேசமுடைய (மன விருப்பமுடைய) நாக தம்பதிகளும் கந்தர்வமிதுனங்களும் வித்யாதரக்கூட்டங்களும் அந்தப் பர்வதத்தின் பெருப்பெரிய தாழ்வரைகளைவிட்டுப் பயந்தோடிப் போய்க்கொண்டிருந்தன. பக்ஷிகள் மேல் கிளம்பிப் போயின. பெரிய ஸர்ப்பங்கள் பாழிகளில் மறைந்தன. சிகரங்களிலுள்ள பெருங்கற்கள் இப்படியும் அப்படியும் அசைந்தன. அப்பொழுது ஸர்ப்பங்கள் பாழிகளினின்று பாதி வெளிவந்து படங்களை விரித்துப் பெருமூச் செறிந்துகொண்டிருக்கையில், அந்தப் பர்வதம் பல டக்கயங்கள் கட்டப் பெற்றதுபோல் ப்ரகாசித்தது. அந்தப் பர்வதத்திலுள்ள மஹர்ஷிகள் பயந்து ஓடிப்

போகையில், அவர்களைப்பிரிந்த அப்பர்வதம் மஹாரண்யத்தில் ஸஹாயமாயிருப்பவர் கைவிட்டுப்போகையில் ஒண்டியாகிப் பயந்து வருந்துகின்ற வழிப்போக்கன் போலிருந்தது. வேகமுடையவனும் சத்ரு வீரர்களை முடிக்குந் திறமையுடையவனும் கம்பீரமனமுடையவனும் மிகவும் புகழ்பெற்ற மஹானுபாவனும் வானரர்களில் சிறந்த வீரனுமாகிய அந்த ஹனுமான் வேகத்தைக்காட்ட முயன்று மனத்தில் ஸமுத்ரத்தைத் தாண்ட நிச்சயித்து அப்பொழுதே மனத்தினால் இலங்காபுரியைச் சேர்ந்தவனாயினான்.

அறுபத்தேழாவது ஸர்க்கம்
முற்றிற்று.

கிஷ்கிந்தாகாண்டமும் முற்றுப்பெற்றது.

ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணேநம:.

